# 57. நினைவுகள்

மாலை வேளையில் போவோர் வருவோரெல்லாம் காலை இடித்துக் கொண்டு போக அந்த இடத்தில் நிலைத்து நிற்க முயன்றான் சாமா. அந்த இடத்தில் நின்று கொண்டிருப்பது அப்படி ஒன்றும் சாத்தியமான காரியமாக இல்லைதான். பட்டணத்திலே இவ்வளவு ரகம் ரகமாக உள்ள மனிதர்கள் இருக்கிறார்களே- அவசரப்படுகிறவர்கள், அவசரமாக நடக்கிறவர்கள், எதிரே யார் யார் வந்தாலும் பாராட்டாமல் போகிறவர்கள். தம் விஷயம் தவிர வேறு எதையும் கவனிக்காதவர்கள் என்று இவ்வளவு ரகம் இருந்ததே - இது உலகில் ஒரு சிறு பகுதி. இன்னும் பெரிய நகரங்களில், இன்னும் கூட்டமான ரஸ்தாக்களில் எப்படியெல்லாம் இருக்கும்? இத்தனை மனிதர்களுமாகச் சேர்ந்து சிருஷ்டித்த உலகத்தில் ஒரு பகுதியை, எழுத்தில் உருவாக்க முயன்றவன் அவன். கற்றது கைம்மண்ணளவு என்று வசனம் சொல்வார்கள். அவன் எழுதியதோ அந்தக் கைம்மண்ணிலும் ஒரு மணித்துளி. இத்தனையையும் சிருஷ்டித்துத் தானாக ஓடுவது போல் ஓடிக் கொண்டிருந்த அந்தக் கடவுளுக்குத்தான் எவ்வளவு பெருமையும் ராங்கியும் இருக்க வேண்டும்? எனக்கு விளம்பரம் பிடிக்காது என்று சொல்லிக் கொள்கிற சில பெரிய மனிதர்களைப் பற்றி ஞாபகம் வந்தது சாமாவுக்கு. உண்மையிலேயே விளம்பரம் வேண்டாமென்று யாரையாவது சொல்ல வேண்டுமானால் கடவுளைத்தான் சொல்ல வேண்டும் என்று எண்ணினான் சாமா.

ஆனால் கடவுளுக்கு மணியடிக்கப் பூசாரிகளும், கவிபாடப் பக்தர்களும், திட்டுவதற்குத் துரதிருஷ்டசாலிகளும் உலகில் ஏராளமாக இருந்தார்கள். இல்லையென்றோ, உண்டு என்றோ கட்சி கட்டிக் கொண்டு, கடவுள் மூலமாகவே தங்கள் நாட்கள் பூராவையும் செலவிடுகிற நாஸ்திகர்களும் ஆஸ்திகர்களும் ஏராளமான பேர்வழிகள் இருந்தார்கள். நேரில் எதிர்ப்படாமல், குரல் காட்டாமல் ஒதுங்கி நிற்பது கடவுளுக்குச் சாத்தியமாகவே ஆகிறது. ஆசிரியனோ, நடிகனோ அப்படி இருந்துவிட முடியுமா? முடிந்தாலும் அது அவன் ஏற்றுக்கொண்ட கடமையிலிருந்து நழுவிய



மாதிரியேதான் ஆகும்.

கடவுளையும் கலைஞனையும் பற்றிச் சிந்திக்க பஜார் கூட்டந்தான் சரியான இடம் என்று தனக்குத்தானே கூறிக் கொண்டு நகைத்தான் சாமா. காட்டுக்கு ஓடிப் போவதிலே இஷ்டமில்லை. இந்தக் கூட்டத்தில் இடிபட்டுக் கொண்டே சிந்திப்பதுதான் ஏற்றது என்றுகூடச் சொல்லவேண்டும். "கூட்டத்தில் கூக்குரல்-அதுவே இன்று நம் கடவுள்!" என்று ஒரு கலைஞன் கூறியது ஞாபகம் வந்தது சாமாவுக்கு. அவனுக்கு என்னவோ இந்த மாதிரி இடங்களில்தான், அதாவது சௌகரியமற்ற இடங்களில்தான், சிந்தனைகள் வேகமாக நீண்டு ஆழ்ந்து பரந்து வளர்ந்தன. தன் கதைகளுக்கு ஆதாரமான யோசனைகள் பலவும் இந்த மாதிரி மவுண்டு ரோடு ரவுண்டானா, மயிலாபூர் லஸ், சைனாபஜார், எஸ்பிளனேட் முதலிய இடங்களில் தோன்றியவை என்று எண்ணினான் சாமா.

எதிர்ச்சாரியில், கார்ப்பரேஷன் பழ மார்க்கெட்டுக்குப் பக்கத்துச் சந்திலிருந்து முகத்தில் அம்மைத் தழும்புடனும் படிந்து வாரிய கிராப்புடனும் தோளில் ஒரு குழந்தையைச் சாத்திக் கொண்டு, கையில் ஒரு குழந்தையைப் பிடித்துக் கொண்டு ஒருவர் வந்தது அவன் கண்ணில் பட்டது. தோளில் சார்த்தியிருந்த குழந்தையின் சட்டைச் சிவப்பில் சூரியஒளி பட்டுத் தகதகத்தது. சாமாவின் கண்களை முதலில் கவர்ந்ததே அந்த சிவப்புப் பட்டுத்தான். கூட வந்த நாலைந்து குழந்தைகளுங்கூட ஒரே மாதிரியான வர்ணப் பட்டுத் துணி அணிந்திருந்தார்கள். பெண்கள் கவுன்கள்; பையன்கள் புஷ் ஷர்ட்டுகள். இந்தக் குழந்தைகளுக்கு மத்தியில் ஒளியிழந்த சந்திரன் மாதிரி வந்த பெண்மணி அந்த நாட்களில் அழகாக இருந்திருப்பாள். இப்போது குடும்பக் கவலைகளிலும் குழந்தைக் கவலைகளிலும் அழகு போய்விட்டதே என்ற கவலைகூட அற்றவளாக இருந்தாள் என்று அவளை அவ்வளவு தூரத்திலிருந்து பார்த்தும் நினைத்துக் கொண்டான் சாமா.

இதற்குள் வேறு ஒரு சம்பவம் அவன் கவனத்தையும் கண் களையும் கவர்ந்தது. வேகமாக வந்து கொண்டிருந்த ஓர் ஆட்டோ ரிக்ஷாவிலிருந்து தப்பிக் கொள்ள முயன்ற ஒரு வாலிபன், அதைவிட வேகமாக வந்து கொண்டிருந்த ஒரு மோட்டார் காரில் அகப்பட்டுக் கொள்ள இருந்தான். அகப்பட்டுக் கொண்டிருந்தானானால் என்ன ஆகியிருக்கும் என்று யோசித்தான் சாமா. அவன் அதற்கு முன்

இரண்டே இரண்டு விபத்துக்களைத்தான் பார்த்திருந்தான். பதினாறு பதினேழு வருஷங்களுக்கு முன் தஞ்சாவூர் ஸ்டேஷனில் திருச்சி ரயில் வந்து கொண்டிருந்தபோது, சாமாவுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஒருவன் பாய்ந்து தண்டவாளத்தில் விழுந்து உயிரைப் போக்கிக் கொண்டான். இரண்டு துண்டாக்கி விட்டது அவனை அந்த ரயில்.

அதற்கு முந்தி அவன் பார்த்த விபத்து கோயம்புத்தூரில் அவன் இன்டர்மீடியட் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது நடந்தது. ஒருநாள் சாமாவும், ரமணனும் போய்க் கொண்டிருந்தார்கள். கோவையில் புதிதாக நிர்மாணமாகிக் கொண்டிருந்த ஓர் எக்ஸ்டென் ஷனில். கோணல் மாணல் இல்லாத நீண்ட அகன்ற நேர் தெரு அது. ஜனநடமாட்டம் அதிகம் இல்லை. சுவாரசியமாகப் பேசிய படியே போய்க் கொண்டிருந்த நண்பர்கள் காதில் அந்தக் கார் நெருங்கி வந்த சப்தமே விழவில்லை. எங்கிருந்தோ கனத்த வேகமாக வந்தது கார். சப்தமே செய்யாமல் போகக்கூடிய, பெரிய புதிய கார். நீலமும் தங்கமுமாகப் பார்க்கப் பளபளவென்று அழகாக இருந்தது. ஹார்ன் அலறல் கேட்டுச் சாமாவும் ரமணனும் விலகினார்கள், அவசர அவசரமாக. அப்படி விலகியிராவிட்டால் அன்று அவர்களில் ஒருவராவது உயிர்விட்டிருக்க வேண்டியதுதான். அவர்களிடம் வந்த கார், அவர்களைத் தாண்டி ஐம்பது கஜ தூரத்தில் மெதுவாகப் போய்க்கொண்டிருந்த ஒருவனைப் பின்பற்றுவது போலப் பாய்ந்தது. அவன் தெரு ஓரமாகத்தான் போய்க் கொண்டிருந்தான். எனினும் கார் அவனையே தொடர்ந்து போவது போலப் போய், வேகமாகப் போய், ஹார்ன்கூட அடிக்காமல் அவனை வீழ்த்தித் தள்ளிவிட்டு மேலே இன்னும் வேகமாகச் சென்றுவிட்டது. சற்று முன் மனிதனாக இருந்தவன், வெள்ளைக்கல் ரோட்டிலே ரத்தமும் தசையும் மூளையும் துணியுமாகச் சிதறிக் கிடந்தான். என்ன கோரம்!

இருபத்தொன்பது வருஷங்களுக்குப் பின் இப்போது அதை நினைத்துப் பார்க்கும்போது சாமாவுக்கு உடலை என்னவோ செய்தது. வயிற்றைக் குமட்டியது. தலையை ஆட்டித் தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றான் அவன், அந்தக் கோரத்திலிருந்து.

“என்ன கே.என்.” என்று பழகிய குரல் ஒன்று அருகில் கேட்டது. திரும்பிப் பார்த்தான் சாமா. சற்றுமுன் அவன் வந்த ரேஷன் பழ மார்க்கெட்டுக்குப் பக்கத்து சந்தில் பார்த்த அம்மைத்



தழும்பு அவன் எதிரே நின்றது. இப்போது நிழலில் பார்த்தால் பளபளக்காத பட்டுச் சட்டைக் குழந்தை அவன் தோளில் இருந்தது. கைப்பிடியாக ஒரு குழந்தை. நாலைந்து குழந்தைகள், படிப்படியான வயசானவை, அவை தாயை ஒட்டி நின்றுகொண்டு சாமாவைச் சந்தேகக் கண்களுடன் பார்த்தன.

“தெரியவில்லையா, கே.என்.?” என்றான் சாமாவைக் கூப்பிட்டவன். “நான்தான் ரமணன். பார்த்துப் பதினெட்டு வருஷங்கள் ஆகிறது”, என்றான்.

சாமாவுக்குச் சாதாரணமாகவே கண் தெரியாது. பத்தடி தூரத்தில் இருப்பவர்களையே சரியாகத் தெரியாது. அப்படியிருக்க எதிர்ச்சாரியில் வந்து கொண்டிருந்த ஒருவனைக் கண்டு, அவன் முகத்தில் அம்மைத் தழும்புகள் இருப்பதைக் காண அவன் கண்களுக்குச் சக்தி ஏது? அந்த உருவத்தைக் கண்டவுடனேயே அம்மைத் தழும்புகள் அவன் கண்களில் பட்டதன் காரணம் பிரக்ஞையில் தட்டாத, மனதில் நின்ற ஒரு நினைவாகத்தான் இருக்க வேண்டும். தானும் அறியாமலே அவன் அப்போதே அவனைக் கண்டுவிட்டான் என்றுதானே சொல்லவேண்டும்? சிந்தனையில் ஆழ்ந்து பேசாதிருந்து விட்டால் இந்தச் சந்தர்ப்பத்தில் மிகவும் நெருங்கிய நண்பன்கூடத் தவறாக நினைக்கக்கூடும் என்பதை அறியப் போதிய அனுபவம் பெற்றவன்தான் சாமா. அவன், “ரமணனா? பார்த்து இருபது வருஷங்களுக்கு மேல் இருக்குமேடா? சௌக்கியங்கள் எல்லாம் எப்படி? எந்த ஊரில் இருக்கிறாய் இப்போது? பட்டணத்தில் எங்கே எத்தனை நாள் இருக்கிறாய்? ஒரு நாள் என் வீட்டுக்கு வா, வராமல் போய்விடாதே!” என்றான் சரமாரியாக.

“இன்னமும் நீ பழைய மாதிரியே பேசுகிறாய். உன் குரல், உன் உருவம், மௌனங்கள், பேச ஆரம்பித்தால் உள்ளம்-எல்லாம் அப்படியேதான் இருக்கிறது,” என்றான் ரமணன்.

கோயம்புத்தூரில் இரண்டு வருடம் சேர்ந்து படித்த நாட்களில் ரமணனும், சாமாவும் இணை பிரியாமல்தான் இருப்பார்கள். எப்போதும் சேர்ந்துதான் காலேஜில் உலாவுவதற்குப் புறப்படுவார் கள். அதற்கேற்ற மாதிரி அவர்கள் வீடும் கறுப்பக் கவுண்டர் தெருவில் பக்கத்தில் பக்கத்தில் இருந்தது. வாய் ஓயாமல் பேசுவார்கள். உலகில் உள்ள எல்லா விஷயங்களையும் அளந்து

கண்டு எண்ணுகிற வயசு அவர்களுக்கு. எதையும் புதிராக ஏற்றுக் கொண்டு, அந்தப் புதிரை விடுவிக்க, ஷெர்லக் ஹோம்ஸ் மாதிரியும், ஹெர்கூல் பாய்ராட் மாதிரியும் இருவரும் சவால் விடுவார்கள். இருவரில் ஒருவரும் ஊனம் அல்ல. இருவருமே ஷெர்லக்குகள்தாம்.

பெண்மை என்கிற புதிர்தான் அவர்களுக்குப் புதிர்களிலெல் லாம் பெரிய புதிராக இருந்தது. புத்தகங்களில் படிப்பதிலிருந்து கற்பனை செய்து கொள்வதைத் தவிர, அவர்களுக்கு அதை விடுவிக்க நேரடியான அநுபவங்கள் கிடையாது. ரமணன் சாமாவைவிடப் பெரியவன். இருவருமே அப்போது பள்ளிப்படிப்பு முடிந்து காலேஜில் சேர்ந்தவர்கள். நாட்கணக்காக அவர்கள் அது பற்றிப் பேசினார்கள் என்று ஞாபகம் வந்தது சாமாவுக்கு. பெண்மை என்ற புதிரை விடுவிக்கத் தெரியாமல் பயந்து ஒதுங்கி ஓடி வாழ்வில் ஐம்பது வருஷங்களைப் பிரம்மசாரியாகவே கழித்துவிட்ட சமஸ்கிருத வாத்தியாரிடம் அவர்கள் இருவருக்குமே ஓர் அலட்சியம். பெண்மை என்கிற புதிர் விடுபடாதிருந்தால் தேவலையே என்று தான் நினைக்கிற மாதிரியே அவனும் நினைத்தாலும் நினைக்கலாம் என்று எண்ணினான் சாமா.

நிமிர்ந்து எதிரே நின்ற குடும்பத்தைப் பார்த்தான் சாமா. அழகு இருந்த இடமாகக் காட்சியளிக்கவில்லை அந்த மாது இப்போது. அவளும் சாதாரணமான ஒரு பெண். முகத்தில் கடினமான பாவம் என்று சொல்லும்படியாக ஒன்றும் இல்லை. கணவனுக்குப் பொங்கிப் போடுவதும், குழந்தைகளைப் பெறுவதும், வருமானத்தில் குடும்பத்தை நடத்துவதுமே தன் பொறுப்பு என்று உணர்ந்து நடக்கும் சகதர்மினி அவள் என்று எண்ணினான் சாமா. தன் மனைவி போல எட்டாததை எண்ணி வருந்தி வருத்தப்படுகிற வளாக இருக்கமாட்டாள் என்று தோன்றிற்று.

ரமணன் தன் சுகதுக்கங்களையும் லாப நஷ்டங்களையும் பற்றி ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தான். ரமணனின் வருகையால் கிளறி விடப்பட்ட நினைவுக் குழம்பு அவன் உள்ளத்துள் கொந்தளித்துக் கொண்டிருந்தது; குமுறிக் கொண்டிருந்தது. ஓரொரு திவலை தெறித்து எழுந்து விழுந்தது.

ரமணனும் தானும் தாமஸ் தெருவில் கையில் ரூபாயுடன் ஒரு வீட்டின் வாசற்படி வரையில் போய்விட்டு, முதற்படி தாண்டி இரண்டாவது படியில் காலே வைக்காமல் திரும்பிவிட்டு வந்த



இரவு ஞாபகத்துக்கு வந்தது சாமாவுக்கு. அந்த முதல் படியில் காலடி எடுத்து வைத்ததே எவ்வளவு துணிகரமான முயற்சியாக அப்போது தோன்றியது! தங்களைப் போன்ற எத்தனையோ வாலிபர்களுக்குப் புதிர்களை விடுவித்துத் தந்த ஒரு பெண், அந்த வீட்டிலே அவர்களுக்காகக் காத்திருந்தாள். ஆனால் அவர்களால் தான் அடியெடுத்து வைத்து அவளை அணுக முடியவில்லை. பின்னால் ஒரு தரம் அவர்கள் இருவரும் ராஜாத்தெருவோடு நடந்து போய்க் கொண்டிருந்தபோது ரமணன் எதிரில் வந்து கொண்டிருந்த பெண்மணியைச் சுட்டிக்காட்டினான். "நமக்குத் தைரியமில்லாமல் திரும்பி வந்தோமே, அன்றிரவு அந்த வீட்டில் நம்மை ஏற்கக் காத்திருந்தவள் அந்தப் பெண்தான்!" என்று சொன்னான். அவளுக்குத் தன்னைவிடப் பத்து வயசாவது அதிகம் இருக்கும் போல இருக்கிறதே என்று எண்ணியதாக ஞாபகம் வந்தது சாமாவுக்கு. அவள் தாண்டிப் போனபின் திரும்பிப் பார்த்தபோது, அவள் நடை வாத்து நடை போல இருப்பதாகத் தோன்றியது. இன்டர்மீடியேட் பரீட்சையில் தேர்ச்சி பெற்றபின் கோடை விடுமுறையில் ரமணனுக்குக் கல்யாணம் நடந்தது. அதற்குச் சாமா அளித்த பரிசு முதல்எழுத்துக்களைக் கூட்டினால் ரமணன் காமாட்சி என்று பெயர் வரும்படியாக எழுதிய ஒரு கவிதைதான். "திரைகள் விலகுகின்றன" என்று ஆரம்பித்தது, அந்த ஆங்கிலக் கவிதை. இப்போது எண்ணும்போது மணப் பரிசாக அது ஒரு விரசமான பாட்டுத்தான் என்று தோன்றிற்று. ரமணன் அப்படி எண்ணவில்லை என்பதை அப்போது வந்த அவன் கடிதம் சொல்லிற்று. ஆனால் அது அவன் நட்பின் சிறப்பு.

"வீட்டுக்கு வருகிறேன், சாமா. எப்போது சௌகரியம்?" என்று கேட்டான் ரமணன்.

"எனக்கு எப்போதும் சௌகரியந்தான். வேலை வெட்டிதான் இல்லையே. உன் மனைவியையும் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு வா. சனிக்கிழமை வாயேன்," என்றான் சாமா.

கோயம்புத்தூர் ஞாபகங்கள் பல, ஒன்றின் பின் ஒன்றாகச் சாமாவின் மனத்திலே போட்டியிட்டுக் கொண்டு துருத்தின. அந்த ஞாபகங்களின் வேகமும் இரைச்சலும் அவன் காதை அடைத்தன. ரமணன் சொல்லிக் கொண்டிருந்த க்ஷேமச் செய்திகள் அவன் காதில் விழவே இல்லை. அவன் படித்த வருஷம் அதே கல்லூரியில் இன்னொரு கே.என்.சாமா இருந்தான். அவன் கீழ் வகுப்பில்

படித்துக் கொண்டிருந்தான் என்பது ஞாபகம் வந்தது சாமாவுக்கு. பரிசுகளில் எல்லாற்றையும் இரண்டு சாமாக்களுமாகப் பங்கிட்டுக் கொண்டு எல்லாரையும் ஆச்சரியத்தில் மூழ்கடித்தது ஞாபகம் வந்தது சாமாவுக்கு. அந்தச் சாமாவுக்கும் ஊர் தஞ்சாவூர் ஜில்லாவில் எங்கோ காவேரியாற்றங்கரையில்தான். கோயம்புத்தூர்க்காரர்களுக்கு அந்த வருஷம் சற்றுப் பெருமையாக இருந்ததில் ஒன்றும் இல்லை.

கோயம்புத்தூரில் அந்த நாட்களில் தோசைக்கு ஹோட்டல் களில் கடப்பாரை என்று செல்லப் பெயர் சொல்வார்கள். அதாவது கடப்பாரையைப் போல் ஜீரணிக்கச் சிரமப்படுத்துமாம் அது. கோயம்புத்தூர் கடப்பாரையைத் தொடர்ந்து, இன்னொரு ஞாபகமும் வந்தது சாமாவுக்கு. கோவையில் ஒரு சமயம் அவன் போய்த் தங்கியபோது ஹோட்டலில் ஸ்பெஷல் தோசை ஆர்டர் செய்தான். "52 தானே? போட்டுக் கொண்டு வருகிறேன்," என்று போன பையன் நிமிஷத்தில் நல்ல தோசையாகவே கொண்டு வந்தான். "52 என்றாயே, அதற்கு என்ன அர்த்தம்?" என்று சாமா கேட்டதற்குப் பையன் தந்த விளக்கம் இதுதான்; "கோயம்புத்தூருக்கும் சேலத்துக்கும் இடையே உள்ள தூரம் 104 மைல். கோயம்புத்தூர்த் தோசை இந்தப் பக்கத்துத் தோசைகளுக்கே ஆதர்சம். சேலத்து இந்தத் தோசை அந்த ஆதர்சத்தை நோக்கிப் பாதி வழிதான் போகிறது. அதனால் அதற்கு 52 என்று பெயர்," என்றான் பையன். சேலத்துக்காரர்கள் நாணயமானவர்கள்தாம் என்று எண்ணினான் சாமா. பாதி வழிதான் போகிறது தோசை என்று தெரிந்து கொள்வார்களே; பெரிய விஷயம் அல்லவா அது? தென்னிந்தியாவில் முக்கியமாகத் தமிழ்நாட்டில், ஹோட்டல்களின் இந்த அறுபது வருஷத்திய சரித்திரத்தை ஆராயவேண்டும் என்ற ஆசை சாமாவுக்கு ரொம்ப நாளாகவே உண்டு. அந்த ஆசை எப்போது நிறைவேறுமோ? அதை எழுதுவதற்குத் தன்னைப் போலத் தகுதியுள்ளவர்கள் அத்தனை பேர்வழிகள் இருக்கமாட்டார்கள் என்பது நிச்சயம்!

"இந்தக் கும்பலிலே நின்று பேசக்கூட முடியவில்லையே!" என்றான் ரமணன்.

"பேசுகிறோமே. அது நல்லதுதான்," என்றான் சாமா.

"எப்போதுமே குயுக்தியாகச் சொல்லிக் கொண்டிருப்பதுதான் உன் பழக்கம். அந்தப் பழக்கம் இன்னும் மாறவில்லை என்று



தெரிகிறது," என்றான் ரமணன்.

"எப்படி மாறும்? உள்ளுக்குள் உள்ள அந்தக் குயுக்தி மனப்பான்மையை வைத்துத்தானே என் பிழைப்பே இன்று நடக்கிறது!" என்றான் சாமா.

"காலேஜில் இருக்கும் போதும், பிறகு இரண்டொரு தடவை சந்தித்தபோதும் ஏதோ எழுதப் போகிறேன், எழுதப் போகிறேன் என்று சொல்லிக் கொண்டிருப்பாயே, இப்போது அந்தப் பைத்தியக்காரத் தனத்திலிருந்து விடுபட்டு விட்டாயா? என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று விசாரித்தான் ரமணன்.

"எழுதப் போகிறேன், எழுதப் போகிறேன் என்று இன்னமும் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறேன். என்றாவது ஒருநாள் குடித்தனக்காரன் கண்ணிலும் படும்படியாக ஏதாவது எழுதி விடுவேன். பயப்படாதே!" என்றான் சாமா.

சேலத்து 52 கதைதான் போலும் தன்னுடைய இலக்கிய சேவையும் என்று எண்ணினான் சாமா. அது பாதி வழி போயிற்று என்ற நிச்சயம் இருந்தது. தன் இலக்கியச் சேவையில் அந்த நிச்சயமும் இல்லை போலும்.

"நம்மோடு படித்துக் கொண்டிருந்தானே-ராமன், ஞாபகம் இருக்கிறதா?"

"ஒல்லியான வெள்ளைப் பையன் ஒருவன்..." கோயம்புத்தூர்ப் பாஷையை ஞாபகம் வைத்துக் கொண்டு கேட்டான் சாமா.

"அந்த வெள்ளைப் பையன்தான். அவனை நேற்று அகஸ்மாத் தாகச் சந்தித்தேன். பாங்கில் ஏதோ வேலையில் இருப்பதாகச் சொன்னான். கார் வைத்துக் கொண்டிருக்கிறான். மாம்பலத்தில் பங்களாவில் இருக்கிறான்," என்றான் ரமணன்.

எவ்வளவு பொறாமையுடன் இந்தச் செய்தியைச் சொன்னான் ரமணன் என்று கவனித்த சாமாவுக்குச் சிரிப்பு வந்தது. தன்னைப் பற்றி அவன் பொறாமைப்பட வேண்டிய அவசியமே ஏற்படாது என்று எண்ணினான் சாமா. "நான் கோயம்புத்தூரில் நம்மோடு படித்த கிருஷ்ணனை ஒருநாள் சந்தித்தேன். சிங்கப்பூரில் இருப்பதாகச் சொன்னான்," என்றான் சாமா.

"என்ன பண்ணிக் கொண்டிருக்கிறானாம்?"

"அதைக் கேட்கவில்லை நான். சிங்கப்பூரில் காக்கையே பார்க்க முடிவதில்லை என்று சங்கடப்பட்டுக் கொண்டிருந்தான். காக்கை பார்க்க முடியாத தேசமும் ஒரு தேசமா என்று என்னைக் கேட்டுக் கொண்டிருந்தான். அதிலிருந்து அவன் சிங்கப்பூரில் அப்படி ஒன்றும் சௌகரியமாக இல்லை என்று எனக்குத் தோன்றிற்று" என்றான்.

"இன்னும் ஏதோ அவனைப் பற்றிக் கேள்விப்பட்ட மாதிரி இருக்கிறது. திட்டமாக ஒன்றும் தெரிய வரவில்லை," என்றான் ரமணன்.

"போகலாம், அப்பா!" என்று சிணுங்கிற்று, ரமணன் கையைப் பிடித்துக் கொண்டு இவ்வளவு நேரமும் நின்ற குழந்தை.

"சனிக்கிழமை சாப்பிட வா. எல்லாரையும் அழைத்துக் கொண்டு வா," என்றான் சாமா.

ரமணன் போன பிறகு வேறு ஒரு ஞாபகம் வந்தது சாமாவுக்கு. கோவைக் கல்லூரியில் பிரின்சிபாலாகத் தம் ஆயுளில் மேற்பார்வை யில்லாத உத்தியோகம் வகித்தவர் கல்லூரி வாசகசாலைக்கு, எட்கார் வாலஸ், ஆப்பன்ஹீம், ஸபாடினி, சார்லஸ் கார்விஸ் முதலிய புத்தகங்களையே நூற்றுக்கணக்கில் வாங்கி அடுக்கிவிட்டார். இலக்கியம் என்றால் அவைதாம் இலக்கியம் என்ற அபிப்பிராய முள்ளவர் அவர். சாமாவும் அந்த நூல்களை ஆர்வத்துடன் படித்ததுண்டு. தன் இலக்கிய ரசனை தவறானதாக இருந்து, அவைதாம் இலக்கியம் என்கிற நினைப்புதான் சரியானதோ என்கிற யோசனை வலுத்தது சாமாவுக்கு.

இருட்டவும் தொடங்கி விட்டதால் வீட்டுக்குப் போகக் கிளம்பினான். ஆனால் ரோட்டில் அவன் இறங்கியவுடனே ஒரு ரிக்ஷா, ஓர் ஆட்டோ, ஒரு பார வண்டி எல்லாம் அவனையே குறி பார்த்துக் கொண்டு வந்தன. இனிமேல் சிந்தனை சாத்தியம் அல்ல, உயிருடன் வீடு போய்ச் சேர வேண்டுமானால் என்று எண்ணிக் கொண்டே நடந்தான் சாமா.

●

*கலைமகள் 1957*